8692





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

හින්දු ශිෂ්ටාචාරය I
இந்து நாகரிகம் I
Hindu Civilization I

46 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

1. இருக்கு வேதத்தில் மக்களது ஒழுக்கத்தைக் கண்காணிக்கும் தெய்வமாகப் போற்றப்படுபவன்
   (1) வருணன் (2) ஆதித்தியன் (3) உருத்திரன் (4) அக்கினி (5) சோமன்

2. பல்லவர்களது சைவ சமய ஈடுபாட்டைக் குறிக்கும் சமயச் சின்னமாக விளங்கியது
   (1) தர்மசக்கரம் (2) நந்தி (3) சுவஸ்திகா
   (4) சிங்கம் (5) கருடன்

3. சிவாகமங்களில் கோயிற் கிரியைகளை வகுத்துக்கூறும் நான்கு பிரிவுகளைக் கொண்ட தொகுதி
   (1) சிட்சை, கல்பம், சந்தஸ், நிருக்தம்
   (2) சரியை, கிரியை, யோகம், ஞானம்
   (3) கர்ஷணம், பிரதிஷ்டை, உற்சவம், பிராயச்சித்தம்
   (4) ஆசார காண்டம், வியவகார காண்டம், பிராயச்சித்த காண்டம், உற்சவம்
   (5) மூர்த்தி, தலம், தீர்த்தம், உற்சவம்

4. வேதங்களுக்குரிய பெயர்களுள் 'சுருதி' என்பதன் பொருள்
   (1) ஓதுவதன் மூலம் செவியால் கேட்கப்பட்டு வந்தது.
   (2) எழுத்தில் பொறிக்கப்படாதது.
   (3) மனிதரால் ஆக்கப்படாதது.
   (4) ரிஷிகளால் ஆக்கப்பட்டது.
   (5) சூக்தங்களால் ஆக்கப்பட்டது.

5. "நீரில் கலந்த உப்பானது கண்ணுக்குத் தெரியாது இருப்பதுபோல பிரமம் கண்ணுக்குத் தெரியாது எங்கும் நிறைந்துள்ளது" என்ற வர்ணனை இடம்பெறும் உபநிடதம்
   (1) கடோபநிடதம் (2) சாந்தோக்கிய உபநிடதம் (3) பிருகதாரண்யக உபநிடதம்
   (4) முண்டகோபநிடதம் (5) கேன உபநிடதம்

6. குருகுலக் கல்வியின் முடிவில் குருவினால் சீடனுக்குக் கூறப்பட்ட ஒழுக்கவியல் சார்ந்த அறிவுரைகள் அடங்கியுள்ள உபநிடதம்
   (1) ஈச உபநிடதம் (2) தைத்திரீய உபநிடதம் (3) மகாநாராயண உபநிடதம்
   (4) கௌஷீதகி உபநிடதம் (5) ஐதரேய உபநிடதம்

7. பல்லவர் காலத்தில் தமிழகத்தில் வைதிகக் கல்வியைப் போதித்த கல்வி நிறுவனம்
   (1) நைமிசாரண்யம் (2) திண்ணைப் பள்ளிக்கூடம் (3) காஞ்சி கடிகைதானம்
   (4) வியாகரண மண்டபம் (5) அரண்மனை

8. "பூவைப் பறித்துப் பூசை செய்வதைவிட மேலானது இதய சுத்தியுடனான வழிபாடு" எனக் கூறிய சமயப் பெரியார்
   (1) சுவாமி விவேகானந்தர் (2) சங்கரர் (3) தாயுமானவர்
   (4) மத்துவர் (5) கபீர்தாஸர்

[பக். 2 ஐப் பார்க்க

9. அர்த்தசாத்திரம் என்ற நூலின் ஆசிரியர்
(1) நாரதர் (2) வால்மீகி (3) வியாசர் (4) கௌடில்யர் (5) வசிட்டர்

10. கலைக்கும் சமயத்திற்கும் இடையிலான நெருங்கிய தொடர்பை இந்துக் கலைக் கோட்பாடாக உலகுக்கு எடுத்து விளக்கிய எமது நாட்டு கலாவித்தகர்
(1) காசிவாசி செந்தில்நாதையர் (2) கலாயோகி ஆனந்தகுமாரசுவாமி
(3) ஞானப்பிரகாச முனிவர் (4) அருணாசல தேசிகர்
(5) த. கைலாசபிள்ளை

11. யசுர் வேதத்தில் பல நாமங்களைக் கூறி வழிபடும் முறையை விளக்கும் சதருத்திரியம் என்ற பகுதியுடன் தொடர்புடைய தெய்வம்
(1) சூரியன் (2) உருத்திரன் (3) உஷை (4) இந்திரன் (5) அக்கினி

12. இலங்கையில் கி. பி. 1380ஆம் ஆண்டளவில் இயற்றப்பட்ட செகராசசேகரமாலை என்னும் நூலின் ஆசிரியர்
(1) போசராச பண்டிதர் (2) சோமசன்மா (3) இடைக்காடர்
(4) அம்பலவாணபிள்ளை (5) சபாபதி சோதிடர்

13. இந்து மெய்யியல் அத்வைதக் கோட்பாட்டில் வலியுறுத்தப்படும் ஒருமைவாதத்தின் ஆரம்பத்தைக் குறிக்கும் வேதப்பாடல்
(1) பிரம்மச்சரிய சூக்தம் (2) அக்கினி சூக்தம் (3) நாஸதீய சூக்தம்
(4) யம சூக்தம் (5) சுபர்ணா சூக்தம்

14. ஆதித்த ஹ்ருதயம் என்ற நூல் போற்றும் தெய்வம்
(1) வியாழபகவான் (2) சனிபகவான் (3) சூரியபகவான்
(4) இந்திரன் (5) வருணன்

15. 'எங்கே தருமம் உள்ளதோ அங்கே வெற்றி உள்ளது' என்ற அறத்தினைப் போற்றும் நூல்
(1) அர்த்த சாத்திரம் (2) சுக்கிரநீதி (3) பகவத்கீதை
(4) கேன உபநிடதம் (5) மானசாரம்

16. மத்துவர் பாஷ்யங்கள் எழுதிய பிரதானமான நூல்களின் பெயர்கள் அடங்கிய தொகுதி
(1) பகவத்கீதை, பிரம்மபுராணம், கடோபநிடதம்
(2) பிரம்மசூத்திரம், பகவத்கீதை, தசோபநிடதங்கள்
(3) பகவத்கீதை, பிரம்மசூத்திரம், பிரம்மபுராணம்
(4) மாண்டுக்கிய காரிகை, ஸ்ரீ பாஷ்யம், பகவத்கீதை
(5) பிரம்மசூத்திரம், கல்பசூத்திரம், பிரம்மபுராணம்

17. குமாரக் கடவுளின் வழிபாட்டு முறையைக் கூறும் நூல்
(1) குமார சம்பவம் (2) தசகுமாரசரிதம் (3) ஹர்ஷசரிதம்
(4) குமார தந்திரம் (5) பிருகத்சம்கிதை

18. திருமாலின் ஐந்து நிலைகளைக் குறிக்கும் தொகுதி
(1) பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை
(2) தத்துவம், பேறு, தகுதி, உபாயம், பலன்
(3) மூர்த்தி, தலம், தீர்த்தம், திருப்பதி, ஸ்ரீரங்கம்
(4) பரத்துவம், வியூகம், திருப்பதி, ஸ்ரீரங்கம், விபவம்
(5) பரத்துவம், திருப்பதி, ஸ்ரீரங்கம், தகுதி, பேறு



19. 'மக்களுக்குச் சேவை செய்து அவர்களது துன்பம் நீக்குவதே நடைமுறை வேதாந்தம்' என்பதைச் சாதனையாகக் கடைப்பிடித்த இந்து மத மறுமலர்ச்சியாளர்
(1) இராமானுஜர் (2) சங்கரர் (3) ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்
(4) கௌடபாதர் (5) மத்துவர்

20. திருநெல்வேலி ஞானப்பிரகாச சுவாமிகள் விருத்தியுரை எழுதிய முக்கியத்துவம் வாய்ந்த உபாகமம் எது ?
(1) மிருகேந்திரம் (2) காரணாகமம் (3) சர்வஞானோத்திரம்
(4) பௌஷ்கர ஆகமம் (5) ரௌரவாகமம்

21. வேத இலக்கியங்களின் விரிவுபட்ட கருத்துகளைக் கூறுவதனால் ஐந்தாம் வேதம் எனப் போற்றப்படுவது
(1) அர்த்த சாத்திரம் (2) மகாபாரதம் (3) இரகுவம்சம்
(4) பிருகத்சம்கிதை (5) மயமதம்

22. தென்னிந்திய கோயிற் கட்டடக்கலை வரலாற்றில் கோபுரங்கள் மிகுதியாக அமைக்கப்பட்ட காலம்
(1) பல்லவர் காலம் (2) சோழர் காலம் (3) சங்க காலம்
(4) சங்கமருவிய காலம் (5) விஜய நகர நாயக்கர் காலம்

[பக். 3 ஐப் பார்க்க

**23.** பத்துமலைக் கோயில் என்ற முருகன் ஆலயம் அமைந்துள்ள நாடு
(1) கம்போடியா (2) சம்பா (3) ஜாவா (4) மலேசியா (5) தாய்லாந்து

**24.** "ஆரிய சமாஜப் பணிகளைச் செய்வதன் மூலம் இந்து மதத்தின் சுய பாதுகாப்பு வடிவமாக தயானந்த சரஸ்வதி விளங்குகின்றார்" எனப் புகழ்ந்தவர்
(1) இந்திராகாந்தி (2) ஜவகர்லால் நேரு (3) ராஜாஜி
(4) சுவாமி விபுலானந்தர் (5) டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன்

**25.** மரபுரீதியான தெய்வ விக்கிரகங்களை உருவாக்கும் சிற்பக் கலைஞனுக்கு இன்றியமையாது தேவைப்படும் இரு அம்சங்கள்
(1) சரியை, கிரியை (2) சரியை, யோகம் (3) கிரியை, பாவனை
(4) மனம், வாக்கு (5) தியானமந்திரம், சாஸ்திர அறிவு

**26.** ஆன்மாவின் முத்திக்குரிய தத்துவத்தை உணர்த்தும் வகையில் சிவனது தட்சிணாமூர்த்தத்தில் இடம்பெறும் முத்திரை
(1) சூசி முத்திரை (2) கடக முத்திரை (3) சின்முத்திரை
(4) வரத முத்திரை (5) அபய முத்திரை

**27.** ஆன்மா பக்குவநிலை எய்துவதற்காக சைவசித்தாந்த மரபில் குறிப்பிடப்படும் மூன்று படிநிலைகள் அடங்கியுள்ள தொகுதி
(1) இருவினையொப்பு, சஞ்சிதம், பிராரத்தம்
(2) சஞ்சிதம், இருவினையொப்பு, சத்திநிபாதம்
(3) இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம்
(4) கர்மம், பக்தி, மலபரிபாகம்
(5) பக்தி, பிராரத்தம், இருவினையொப்பு

**28.** 'பிரபத்தியைக் கைக்கொள்வதன் மூலம் முத்தி கைகூடும்' என்ற கொள்கையைத் தமது தத்துவக் கோட்பாட்டில் முன்வைத்த தத்துவவாதி
(1) சங்கரர் (2) இராமானுஜர் (3) கௌடபாதர் (4) மத்துவர் (5) மெய்கண்டார்

**29.** வருடாவருடம் சைவத் தமிழ் ஆய்வு மகாநாடுகளை நடாத்தி, சமய அறிவை வளர்க்கும் மேற்குலக சமய நிறுவனம்
(1) இலண்டன் சைவ முன்னேற்றச் சங்கம்
(2) இலண்டன் சிவயோகம் இந்து அறக்கட்டளை
(3) இலண்டன் திருக்கோயில் ஒன்றியம்
(4) கியூபெக் சைவமகாசபை
(5) கனடா சிவதொண்டன் நிலையம்



**30.** மட்டக்களப்பு சைவப் புலவர் கா. அருணாசல தேசிகர் சைவ மாணவர்களுக்கென எழுதிய சமயநூல்கள் அடங்கியுள்ள தொகுதி
(1) சைவ சமய ஆரம்ப போதினி, சைவ இலக்கிய கதாமஞ்சரி, சைவ சமய சிந்தாமணி
(2) நீலகண்டபாஷியம், ஞானரத்தினாவளி, சைவ சமய சிந்தாமணி
(3) வச்சிரதண்டம், சைவ இலக்கிய கதாமஞ்சரி, வீரபத்திராஸ்திரம்
(4) சிவயோகசாரம், சித்தாந்த சிகாமணி, சைவ சமய சிந்தாமணி
(5) அஞ்ஞான விவேசனம், நீலகண்டபாஷியம், சைவ இலக்கிய கதாமஞ்சரி

**31.** சைவ சித்தாந்த வழியைப் பின்பற்றுபவனாகத் தன்னை 'சைவ சித்தாந்த மார்க்கன்' எனப் பிரகடனப்படுத்திய பல்லவ மன்னன்
(1) மகேந்திரவர்மன் (2) இராஜசிம்மன் (3) பரமேஸ்வரவர்மன்
(4) மாமல்லன் (5) சிம்மவர்மன்

**32.** இந்துக்களின் பொருளியற் சிந்தனையில் இரும்பின் பயன்பாடு பற்றியும் அது விவசாயத்திற்குப் பெருமளவு உதவியமை பற்றியும் குறிப்பிடும் தொன்மையான நூல்
(1) சாந்தோக்கிய உபநிடதம் (2) யசுர்வேதம் (3) சுக்கிரநீதி
(4) மானசாரம் (5) பிருகத்சம்கிதை

**33.** "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முதல்வன் கண்டது முதனூலாகும்" என்ற பாடல்வழியாக சைவசித்தாந்தக் கருத்துகளைக் கூறும், தமிழில் உள்ள மிகப் பழமையான நூல்
(1) சிலப்பதிகாரம் (2) மணிமேகலை (3) தொல்காப்பியம்
(4) பரிபாடல் (5) திருமுருகாற்றுப்படை

**34.** இந்திய மருத்துவத்தின் தந்தை எனப் போற்றப்படுபவர்
(1) பீஷ்மர் (2) வசிட்டர் (3) வால்மீகி (4) தன்வந்திரி (5) வராகமிகிரர்

[பக். 4 ஐப் பார்க்க

8692

**35.** இந்து சமய மரபில் பக்தி நெறிக்கு மூலாதாரமான தோத்திர மரபிற்கு வித்திட்ட தொன்மையான நூல்
(1) மனுஸ்மிருதி (2) மகாபாரதம் (3) இருக்குவேதம்
(4) பிராமணங்கள் (5) சுக்கிரநீதி

**36.** பின்வருவனவற்றுள் சிவனது திரிபுராந்தக மூர்த்தம் பற்றிய விடயங்களோடு **தொடர்புபடாதது**
(1) திரிபுரம் எரித்த வீரச்செயல் பற்றிய வரலாறு சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.
(2) தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி ஆகிய மூன்று அசுரர்களதும் செருக்கை அடக்கி அழித்ததே திரிபுராந்தகரின் தெய்வீக வரலாறு.
(3) பல்லவ, பாண்டிய மன்னர்களின் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் இம்மூர்த்தம் பற்றிக் கூறுகின்றன.
(4) சோழர் காலத்தில் திரிபுராந்தக மூர்த்தம் பெருவழக்குப் பெற்றிருக்கவில்லை.
(5) மன்னன், போரில் வெற்றிபெற ஊக்கமளித்ததற்கு இவ்வடிவம் காரணமாக அமைந்தது.

**37.** வட இந்திய பக்தி இயக்கம் தொடர்பான விடயங்களோடு **பொருந்தாத** கருத்து
(1) வட இந்திய பக்தி இயக்கத்தின் முன்னோடி இராமானந்தர் ஆவார்.
(2) இராமானந்தர் வகுப்புவாதம், மதபேதம் என்பவற்றைப் புறக்கணித்து ஒருமைப்பாட்டைப் பேணினார்.
(3) இராமானந்தரின் சீடர் கபீர்தாஸர் ஆவார்.
(4) இந்து, இஸ்லாமிய சமயங்களின் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர் கபீர்தாஸர்.
(5) இஸ்லாமியராய்ப் பிறந்த கபீர்தாஸர், சைவனாக வாழ்ந்து சைவத்திற்கும் இஸ்லாத்திற்கும் இணைப்புப் பாலமாக விளங்கினார்.

**38.** பின்வருவனவற்றுள் குமரக் கடவுளின் பெயர் **அல்லாதது**
(1) குகன் (2) கங்காதரன் (3) குமரன் (4) காங்கேயன் (5) குருமூர்த்தி

**39.** சுவாமி விபுலானந்தரோடு **தொடர்பற்ற** விடயம்
(1) இளமையிலேயே ஆற்றல், அறிவு, விவேகம் முதலானவை கைவரப் பெற்றவர்.
(2) 1924ஆம் ஆண்டு தீட்சா நாமம் பெற்றவர்.
(3) இராமகிருஷ்ணமிஷனுடன் இணைந்து பணியாற்றியவர்.
(4) இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழிலும் வல்லவராக விளங்கியவர்.
(5) கல்விப் பணியிலும் கலைப் பணியிலும் கொண்டிருந்த ஈடுபாடு போன்று சமூகப் பணியில் பெரியளவான ஆர்வம் கொண்டிராதவர்.

**40.** அம்பிகை வழிபாட்டிற்குரிய நூல் **அல்லாதது**
(1) சௌந்தர்ய லஹரி (2) சகலகலாவல்லிமாலை (3) அபிராமி அந்தாதி
(4) மானசாரம் (5) ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமம்

- மேல்வரும் பகுதிகளிலே தரப்பட்டுள்ள சொற்களில் **இவ்விரண்டு** சொற்கள் குறிப்பிட்ட ஒரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்களுக்குப் பொருத்தமான சோடியைத் தெரிவுசெய்து, விடைத்தாளில் அதன் **இலக்கத்தைக்** குறிப்பிடுக.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>இதிகாசங்களின் செல்வாக்கு | B<br>யாகவேதி அளவைப் பிரமாணம் | C<br>பட்டாரகுரு வழிபாடு | D<br>செல்வச் செழிப்பைக் குறிக்கும் பௌஷ்டிகாணி | E<br>குருகுல மரபு |
| F<br>அரசனின் நன்மைக்குரிய ராஜகர்மாணி | G<br>சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட கதை | H<br>உபநிடதங்கள் | I<br>திருவாரூரில் அதன் தல புராணக்கதை | J<br>சுல்வசூத்திரம் |

**41.** தென்கிழக்காசிய நாடுகளின் இந்துப் பண்பாட்டு மரபுகளைக் குறிக்கும் சோடி
(1) A C (2) A E (3) A F (4) C D (5) C E

**42.** வைதிக இலக்கியங்களில் இடம்பெறும் கணிதத்துடன் தொடர்புடைய சோடி
(1) B H (2) B I (3) B J (4) D J (5) E G

**43.** புராதன இந்துக் கல்விமரபோடு தொடர்புடைய சோடி
(1) A E (2) A H (3) B H (4) C E (5) E H

**44.** அதர்வ வேத மந்திரங்களோடு தொடர்புடைய சோடி
(1) A F (2) B D (3) C D (4) C E (5) D F

**45.** தமிழகக் கோயில்களில் காணக்கூடிய சிறப்புமிக்க ஓவியங்களுடன் தொடர்புடைய சோடி
(1) B G (2) B I (3) C E (4) E I (5) G I

[பக். 5 ஐப் பார்க்க

● **46** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகளை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்து, அத்தொகுதிக்கான இலக்கத்தைக் குறிப்பிடுக.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>விரதம் | F<br>அரசநீதி | K<br>சித்தாந்த சிகாமணி | P<br>நால்வகை ஆச்சிரம கடமைகள் |
| B<br>தனிமனித சமூகவியல் பற்றிய விதிமுறைகள் | G<br>துறவு வாழ்க்கை | L<br>தீர்த்தம் | Q<br>தமிழகத்தில் வீர சைவ மரபை நிலைநிறுத்தியவர் |
| C<br>பிரத்யட்சப் பிரமாணம் | H<br>தேவாரங்களில் போற்றப்பட்டமை | M<br>ஆப்தவாக்கியப் பிரமாணம் | R<br>தவம் |
| D<br>துறைமங்கலம் | I<br>தலயாத்திரை | N<br>நமசிவாய என்பதன் இலக்கணமாகத் திகழ்வது | S<br>சத்திநிபாதம் |
| E<br>ஐந்தொழில்களுடன் தொடர்புடையது | J<br>அனுமானப் பிரமாணம் | O<br>பிராயச்சித்தம் | T<br>திருவாதிரையில் சிறப்பு வழிபாடு |

**46.** புராணங்கள் கூறும் சமய வழிபாட்டு மரபோடு தொடர்புடைய தொகுதி
(1) AFLT (2) AILR (3) BGLS (4) BIOT (5) EFLP

**47.** தருமசாத்திர நூல்களில் சமூக மேம்பாட்டிற்கான விடயங்களைக் கொண்ட தொகுதி
(1) AILT (2) BFOP (3) BGOR (4) CILR (5) EGLT

**48.** சைவ சித்தாந்த தத்துவ விளக்கத்திற்கு உதவும் முக்கிய அம்சங்களைக் கொண்ட தொகுதி
(1) BGLR (2) CHLR (3) CINR (4) CJMS (5) EGOR

**49.** சிவப்பிரகாச சுவாமிகளின் வாழ்வியல் அம்சங்களுடன் தொடர்புடைய தொகுதி
(1) AGLT (2) DGKQ (3) DHLT (4) DILR (5) DIOT

**50.** நடராஜர் வடிவத்தோடு தொடர்புடைய அம்சங்களைக் கொண்ட தொகுதி
(1) CILT (2) DILR (3) EHNT (4) EJLT (5) EGOT

***

8692

AL/2015/46/T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

හින්දු ශිෂ්ටාචාරය II
இந்து நாகரிகம் II
Hindu Civilization II

46 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

அறிவுறுத்தல்கள் :

※ பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** வட இந்தியாவில் குப்தர் ஆட்சிக் காலத்தில் இந்து நாகரிகம் வளம்பெற்றவாற்றை மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டு** தொடர்பாகப் பரிசீலிக்குக.

(அ) சமய நெறிகளின் வளர்ச்சி
(ஆ) இலக்கிய மரபு
(இ) கலை மரபுகள்

**2.** தமிழகத்தில் சோழர் காலத்திலேற்பட்ட இந்து நாகரிக வளர்ச்சியின் பிரதான அம்சங்களை மேல்வரும் விடயங்களில் எவையேனும் **இரண்டு** தொடர்பாக ஆராய்க.

(அ) அரசர்களது பங்கும் பணியும்
(ஆ) கோயில்களும் நுண்கலை வளர்ச்சியும்
(இ) சைவ, வைணவ சமய நெறிகள்

**3.** இலங்கையில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட இந்துப் பண்பாட்டு வளர்ச்சியினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) சமயப் பெரியார்களது பணிகள்
(ஆ) சமய நிறுவனங்கள்

## பகுதி II

**4.** சங்கர வேதாந்தம் ஒரு தத்துவக் கோட்பாடாக உருவாகியமையை மேல்வரும் தலைப்புகளில் எவையேனும் **இரண்டு** தொடர்பாக ஆராய்க.

(அ) சங்கரர் ஏற்றுக்கொண்ட பிரமாண நூல்கள்
(ஆ) சங்கர வேதாந்தத்தில் பிரமம்
(இ) உலகம் பற்றிய கொள்கை
(ஈ) ஆன்ம விடுதலைக்கான வழிமுறைகள்

**5.** பல்லவர் காலத்திலேற்பட்ட கோயிற் கட்டடக்கலை வளர்ச்சியினை மேல்வருவனவற்றின் அடிப்படையில் விபரிக்குக.

(அ) அரசர்களின் பங்களிப்பு
(ஆ) பல்வகை கோயிற் கட்டடக்கலை அமைப்புகள்

**6.** "பிரம சமாஜம் என்ற நவீன இந்து சீர்திருத்த இயக்கத்தின் வழியில் இந்து சமூகத்தை நெறிப்படுத்துவதில் சாதனை படைத்தவர் ராஜாராம் மோகன்ராய்." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை ஆராய்க.

**7.** சைவ சித்தாந்தம் கூறும் இறைக் கோட்பாட்டின் பிரதான அம்சங்களை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.

(அ) இறைவன் உளன் என நிருபிக்கும் முறைகள்
(ஆ) இறைவனது இயல்புகள்
(இ) இறைவனும் ஆன்மாவும்

**8.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(அ) இருக்கு வேதம்
(ஆ) சிவஞானபோதம்
(இ) இலிங்கோற்பவ மூர்த்தம்
(ஈ) நயினை ஸ்ரீ நாகபூஷணி அம்மன் ஆலயம்
(உ) இந்து வழிபாட்டு முறைகளில் மருத்துவ சிந்தனைகள்
(ஊ) தமிழ் நீதி நூல்கள் கூறும் அறப்பண்புகள்

※ ※ ※